வாழப் பிறந்தோம்! தொடர்ச்சி:

தொழிலாளர்களும், பாமரரைப் பணமேட்டைகளும், சமூகத்திடம் அவர்கள் பட்டிருக்கும் கடனைத் தட்டிக் கழித்துக் கொண்டே வருகின்றார்கள்; சமயத்தின் பேரால், தெய்வத்தின் பேரால், ஒழுக்க நியாயத்தின் பேரால் எவ்வளவோ நல்லபடியாகச் சொல்லிப் பார்த்தாயிற்று. இன்று நேற்று அல்ல. ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாகச் சொல்லிப் பார்த்தாயிற்று. ஆனால், இவ் வழிமுறைகளைக் கணக்குத் தீர்க்க வேண்டிய கட்டம் வந்து விட்டது. கடமையை உணர்ந்து தாங்களே வந்தால் ஆச்சு. இல்லாவிட்டால், கடமையை வசூலிக்கக் கடுமையான நடவடிக்கைகள் நடந்தே தீரும்." ***

"பழக்கம் எப்படி ஏற்படுகிறது? ஒரு காரியத்தை மீண்டும் மீண்டும் செய்தால் அது பழக்கப்பட்டுவிடுகிறது. ***

"விருப்பம் வெறும் தண்ணீர்தான். தண்ணீர் வெந்நீராக மாறிக் கொதித்து ஆவி கக்கும்படிச் செய்தால்தான் நீராவி யந்திரத்தை இயக்குவிக்கிற ஆற்றல் நமக்கு உண்டாகிறது. நமது விருப்பம் எஃபோர்டாக மாறிக் குறிக்கோளைக் கொதித்து, அயரா ஆற்றலென்ற ஆவி கக்கினால்தான் காரியம் கைகூடும்." ***.

"எஃபோர்டு கொண்டு ஒரு காரியத்தை செய்யும் போது; பயம், சந்தேகம், திறமையின்மை, எல்லாம் பறந்தோடி போகும். தன்னம்பிக்கை பிறந்துவிடும். வாழ்வின் தேக்க நிலைமாறி, சுறுசுறுப்பும், இயக்கச் சுழலால் உண்டாகும் இன்ப வெறி நிலையும் உண்டாகி; மேலும் மேலும் நமது இலக்கை நோக்கி ஓடுவதற்கு நமக்கு ஊக்கம் உண்டாகிவிடும். உடலும், உணர்வும், அறிவும், ஆற்றலும் ஒருங்கே படியும் வண்ணம் ஒரு காரியத்தில் ஆழ இறங்கி மூழ்கும் போது, நமக்கு உண்டாகும் உற்சாகம் மகா இன்பகரமானது. உற்சாகமும் விடாமுயற்சியும் சேர்ந்தால்தான் எஃபோர்டு உண்டாகும். திடமான எஃபோர்டு நமது குறிக்கோளை அடைய உதவுகிற மகா சக்தி வாய்ந்த கருவி. ***

"அறிவைத் தாகத்தோடு தேடி அலைவதால் அறிவாளியாகலாம். உண்மையைத் தாகத்தோடு தேடி அலைவதால் ஞானியாகலாம்; உயர்ந்த செயல்களையும், லட்சியங்களையும், தாகத்தோடு தேடி அலைவதால் கர்ம "வீர" ராகலாம். மகத்தான வெற்றி பெற்றவர்களெல்லாம் தாம் புரியும் பணியைத் தீவிரமாகப் பற்றியதாலும்; ஒரு நம்பிக்கையோடு, அசைக்க முடியாத எஃபோர்ட்டோடு செய்து வந்ததினாலேயே தமது வெற்றிகளைப் பெற்றார்கள். ***

"பணத்தைப் பற்றி அக்கறை இல்லை என்று சொல்லித் திரிகிறவர்களை நம்பாதீர்கள். ஒன்று, அவர்களுக்குப் பணத்தின் அருமை தெரியவில்லை. அல்லது, நம்மை ஏமாற்றி, நாம் ஏமாந்த போது நம்மிடம் உள்ள பணத்தைத் தட்டிப் பறிக்கத் திட்டம் போட்டு, உமையக்க வேலை செய்து வருகிறார்கள் என்றுதான் அதற்கு அர்த்தம்." ***

'பணம் வாழ்வின் பெரிய வாகனம். முயன்று சம்பாதிக்க வேண்டியது சாதாரண மனிதனுடைய கடமையும் உரிமையுமாகும் ***.